[14th December 1961

ஆவதற்குக் காரணம் என்ன என்பதைப் பற்றி பரிசீலனை செய்யப்படுமா ? இனியாவது இம்மாதிரி காலதாமதம் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளுவதற்கு என்ன நடவடிக்கை யுனிவர்ஸிடியார் எடுத்துக் கொள்ளுகிறார்கள் என்பதையும் அரசாங்கம் ஆராயுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி முன்னாலேயே கேள்வி வந்து, இதற்கு முன்னால் பதிலும் சொல்லியிருக்கிறேன். ஏதோ போதுமான அளவு காகிதம் கிடைக்கவில்லை, அதனால் உரிய காலத்தில் புஸ்தகங்கள் அச்சிடப்படவில்லை என்பதைப் பற்றி கூறப்பட்டது. கடைசி காலம் வரையிலும் காத்திருந்துவிட்டு காகிதம் இல்லை என்று சொல்லாமல், அடுத்த வருஷம் தேவைக்கு வேண்டிய காகிதத்தை முன்னதாகவே உரிய காலத்தில் தருவித்து வைத்துக்கொள்ள வேண்டும் என்று முன்னமேயே பதில் சொன்னேன். இதையெல்லாம் கவனித்து தாமதம் ஏற்படாமல் யுனிவர்ஸிடி பார்த்துக்கொள்ளும் என்று நம்புகிறேன்.

*Kuniamuthur Panchayat.*

*2355-H. Q.—SRI N. MARUDACHALAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோவை குனியமுத்தூர் பஞ்சாயத்தில் 1958 முதல் 1961 வரை பஞ்சாயத்துச் சிப்பந்திகள் பணம் கையாடல் செய்தார்கள் என்று சர்க்கார் கவனத்திற்கு எப்போது வந்தது ?

(இ) பஞ்சாயத்து வரவு செலவு கணக்குகள் வருடாவருடம் தணிக்கை செய்யப்படுவதுண்டா ?

(உ) கடந்த 4 வருடகாலம் ஏன் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கவில்லை ? இந்த கையாடலுக்கும் பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்டுக்கும் சம்பந்தம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) The matter was brought to the notice of the Divisional Panchayat Officer, Coimbatore, by the President of the Panchayat in his letter, dated 5th July 1961.

(இ) Yes, Sir.

(உ) The Audit Report of the Panchayat for the year ending 31st March 1960 did not disclose any case of misappropriation. Hence the question of taking action against the persons responsible did not arise.

SRI N. MARUDACHALAM : இந்தப் பஞ்சாயத்து போர்டில் கையாடப்பட்ட தொகை எவ்வளவு என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கணக்கை தணிக்கை செய்து பார்க்கையில், எந்த விதமான தொகையும் கையாடப்படவில்லை என்பது தெரியவருகிறது. ஆகையினால், எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.